# உலகப் பெருங் கவிஞர்
# கம்பர்

மணிவாசகர் பதிப்பகத்தின்
வெள்ளிவிழா வெளியீடு

பேராசிரியர்
இரா. வ. கமலக்கண்ணன்




மணிவாசகர் பதிப்பகம்
சிதம்பரம்



" இம்பர் நாட்டிற் செல்வ மெலாம் எய்தி அரசாண்
டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா ஓங்கு நீழல் இருந்தாலும்
செம்பொன் மேரு அனைய புயத்திறல்சேர் இராமன்
திருக் கதையில்
கம்ப நாடன் கவிதை யிற்போல் கற்றோர்க்கு இதயம்
களியாதே." —தனியன். 5.

'கல்வியிற் பெரிய கம்பரின்' இராமகாதை உலக மகா காவியங்களுள் ஒன்றாகச் சிறப்பித்துப் போற்றப் பெறுவதாகும். எளியேன் இந்நூலைக் கடந்த முப்பதாண்டுகளாகக் கற்றும், குறிப்பெடுத்தும், சொற் பொழி வாற்றி வந்தும், முற்றக் கற்றுணர்ந்தேன் எனக் கூற வியலாது. எனினும் 'ஆசை பற்றி இந்நூற்கடலை நக்குபு புக்க பூசை'யாக யான் இச்சிறு நூலை ஆய்ந்து எழுதியுள்ளேன். நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை ஆய்ந்து ஒரு தேனீ போன்று பல செய்திகளைப் பலகாலும் முயன்று வரன் முறையாகத் தொகுத்துள்ளேன்.

இந்நூலில் 'கம்பர் காலம்' பற்றிய ஒரு முடிவான அரிய ஆய்வுக் கட்டுரை தமிழ் வடிவில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பாகும். 'The Date of Kambar'— என்னும் அரிய ஆய்வுக் கட்டுரை, அறிஞர் பெருந்தகை உயர் திரு. மு. அருணாசலம் எம். ஏ. (தலைமைப் பதிப்பாசிரியர்,

15-6



தமிழ்ப் பேரகராதித் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம்-தஞ்சை) அவர்களால் சென்னைக் கம்பன் கழக விழா மலரில் (1975), ஆங்கிலத்தில் எழுதி வெளியிடப் பெற்றது. அதனை முற்றும் தழுவி, மேலும் சில செய்திகளைச் சேர்த்து இந்நூலில் அமைத்துள்ளேன். இக்கட்டுரையை எனக்கு அன்புடன் அனுப்பி உதவிய அப்பெரியாருக்கும், அதைத் தமிழில் மொழி பெயர்க்கவும், இந்நூலின் கையெழுத்துப் படிகளை ஒப்பு நோக்கவும் துணையாய் இருந்த புலவர் திரு. டி. சீனிவாசராகவன், எம். ஏ. எம்., எட், அவர்களுக்கும் நன்றியுடையேன்.

'இக்காலத் திறனாய்வு' நோக்கிலும், எல்லாக் காப்பியங்களையும் பல்வேறு கோணங்களில் ஒப்பீடு செய்தும், இந்நூல் அமைந்துள்ளது மற்றொரு சிறப்பாகும். இதற்கு உறுதுணையாக மதுரைப் பல்கலைக் கழகப் பாடத் திட்டத்தை எனக்கு அன்புடன் அனுப்பி உதவிய 'பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரி' தமிழ்ப் பேராசிரியர் உயர் திருவாளர் பா. வளன் அரசு எம். ஏ; பி. எட் அவர்கள் திறத்தும் நன்றியுடையேன்.

இந்நூல் என் முதல்நூல். இது முதன்மையான நூலாக அமைந்துள்ளதா? என்பதை இதை ஆயும் இலக்கிய ஆய்வாளர்களே முடிவு கூறவேண்டும். இந்நூல் செம்மை பெற நற்கருத்துகள் பல நல்கி ஆய்வு நூலாக அமைய உதவியவர் திரு. மெய்யப்பர் ஆவார். ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட காப்பியங்கள் அனைத்துமே பெருங்காப்பியங்களாம். குறிப்பாக, கம்பராமாயணம் அளவாலும் பொருளாலும் மிகப்பெரியது. எனவே எல்லாச் செய்திகளையும் முழுமையாகக் கூறிவிட்டேன் எனக் கூறவியலாது. ஆகவே பல செய்திகள் விடுபட்டுள்ளன எனக் கருத வேண்டா எனவும் வேண்டுகிறேன்.

கலைக் களஞ்சிய தலைமைப் பதிப்பாசிரியராக வீற்றிருந்தவரும், அறிவியல் அறிஞரும், பன்னூலாசிரியருமாகிய பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் மிகச் சிறந்த ஓர் ஆய்வுரையை அணிந்துரையாக அளித்துள்ளார்கள். அவர்களுக்கு நன்றி.

நாளும் நல்ல தமிழ் வளர்க்கும் சிலம்பொலி செல்லப்பனார் சிறந்த திறனாய்வுரையினை வழங்கியுள்ளார்கள். வளரும் தமிழுக்கு உழைப்பவர்க்கு உறுதுணையாய், பற்றுக்கோடாய் விளங்கும் பண்பாளர் செல்லப்பனார்க்கு எனது நன்றி.

''தமிழில் தரமான நூல்களையே வெளியிடுவது'' என்னும் குறிக்கோளின் அடிப்படையில் பல சிறந்த நூல்களையே வெளியிட்டு வரும் ''மணிவாசகர் பதிப்பகத்தார்'' இந் நூலையும் வெளியிட முன்வந்தமைக்கு என் உளங்கனிந்த நன்றியை உரிமையாக்குகிறேன். இப்பதிப்பக உறுதுணையாளர் உயர்திரு பேராசிரியர் ச. மெய்யப்பன் எம். ஏ. அவர்களுக்கு என் நன்றி என்றும் உரித்து. மேலும் இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய கற்பகம் அச்சகத்தார்க்கும் என் நன்றி உரித்தாகுக.

இந்நூல் உருவாக யான் பட்ட தொல்லைகளைக் கற்போர் உணரவியலும். அனைத்திற்கும், தோன்றும் துணையாக இருந்து ஆக்கமும் ஊக்கமும் அன்பும் காட்டிவரும் என் தமிழாசான் உயர் திரு. புலவர் வே. வேணுகோபாலன் அவர் களுக்கும், தோன்றாத் துணையாய் இருந்து நடத்திச் செல்லும் எம்பெருமானுக்கும் என் பணிவார்ந்த வணக்கம் என்றும் உரியது. தந்தை மகற் காற்றும் நன்றியாக, என்னை 'ஈன்று புறந்தந்து அவையத்து முந்தியிருப்பச் செய்து' அண்மையில் 'வானுறையும் தெய்வ நிலை' யுற்ற என் தந்தையார் உயர் திருவாளர் ஆர். வரதராசப்பிள்ளை அவர்களின் பொன்னார் திருவடிகளில் வணங்கி நிற்கிறேன்.

இவண்

இரா. வ. கமலக்கண்ணன்.




# அணிந்துரை

பேராசிரியர்
டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்
எம். ஏ., பி. எஸ்சி., எல். டி., பிஎச். டி.

பழம்பெரு நாடாகிய பாரத நாட்டில் பாமர மக்களின் குருதியிலும் கலந்து திகழ்பவை இராமாயணம், மாபாரதம் என்னும் இரு இதிகாசங்கள். கிருஷ்ண பக்தியில் உள்ளத்தைப் பறிகொடுத்து மயர்வற மதிநலம் அருளப் பெற்ற மாறன் என்று மாச்சிறப்புடன் திகழும் நம்மாழ்வாரும், 'கற்பார் இராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ?'[1] என்றார். சாதனம், சாத்தியம்—உபாயம், உபேயம்—ஆகிய இரண்டிற்கும் இராம பிரானே என்பது ஆழ்வாரின் திருவுள்ளம். இந்த வேத நாயகனின் திருக்கதையைக் கம்பன் கற்றவர் போற்றும் காவிய மாகச் செய்தருளினான்.

எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து—நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்தவைத்த
கம்பன் கவியே கவி.[2]

என்று கம்பன் கவிதையைப் போற்றுவார் கவிமணி. இத்தகைய கம்பன் கவிதையைச் சுவைத்து மாந்தி மகிழ்ந்த ஒரு பெரியார்,

செம்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதை யிற்போல்
கற்றோர்க்கு இதயம் களியாதே.[3]

---

1. திருவாய்: 7·5:1
2. மலரும் மாலையும்—கம்பர்-17
3. கம்ப, காப்பு-8.

என்று திறந்தெரிந்து தம் கருத்தை வெளியிட்டுள்ளார். இந்தக் கவிநயம் மிகுந்த காவியத்தின் திறனாய்வே 'உலகப் பெருங் கவிஞர் கம்பர்' என்னும் ஆய்வுப் பனுவல்.

அல்லாவுதீன் என்ற சிறுவனை மந்திரவாதி தன் அற்புத விளக்கின் துணை கொண்டு ஒரு குகைக்குள் புகுந்து அங்குப் பல்வேறு விசித்திரக் காட்சிகளைக் காட்டுவது போல், இதன் நூலாசிரியர் திரு இரா. வ. கமலக்கண்ணன் தம்முடைய புலமை என்னும் கைவிளக்கைக் கொண்டு வாசகரைத் தம் நூலுக்குள் இட்டுச் சென்று அங்குக் கம்பன் படைத்த காவிய மாளிகையில் பல அற்புத நிகழ்ச்சிகளைக் காட்டுவார். காவியத்தின் முன் வாசலிலுள்ள பூஞ்சோலையில் நின்றுகொண்டு காவிய அமைப்பின் இலக்கணத்தைக் கூறுவார். காவிய மாளிகை களைச் சமைக்கும் அரிஸ்டாட்டில், தண்டி, தொல்காப்பியர் இவர்கள் கூறும் காப்பியக் கட்டடக் கலையின் இலக்கணத்தை விளக்குவார். மேனாட்டுக் காப்பியம், வடநாட்டுக் காப்பியம், தமிழ்நாட்டுக் காப்பியம் இவற்றை ஒப்பிட்டுப் பேசுவார். ஒதீசி, இலியத் என்ற ஹோமரின் இரட்டை மாளிகைகளையும், இளங்கோ அடிகள், சாத்தனார் படைத்த இரட்டை மாளிகை களையும் ஒப்பிட்டுச் சுட்டுவார். இவர்கள் மேற்கொண்ட கட்டட மரபுகளையெல்லாம் விளக்குவார். சிந்தாமணியில் மேற்கொள்ளப் பெற்ற சமண மரபுகளையும், பெரிய புராணத்தில் மேற்கொள்ளப் பெற்ற சைவ மரபுகளையும் ஒப்பிட்டு நம்மைச் சிந்திக்கச் செய்வார். தமிழிலுள்ள இரட்டைக் காப்பியங்களின் அமைப்பின் நீல அச்சுக் கிடைப் படத்தையும் (Blue print plan), கம்பன் படைத்த பெருங் காப்பிய மாளிகையின் கிடைப்படத்தையும் நம் முன் விரித்துக் காட்டுவார்; ஒவ்வொன்றின் தாரதம்மியங்களையும் அலசிக் காட்டுவார். காவிய மாளிகையில் பயன்படுத்தப் பெற்ற பொருள்களைச் சுட்டுவார்; ஒப்பிட்டும் பேசுவார். மேனாட்டுக் காப்பிய உத்திகளையும், நம் நாட்டுக் காப்பியப் பேரறிஞர் களாகிய இளங்கோ அடிகள், சாத்தனார், கம்பர், சேக்கிழார் இவர்கள் மேற்கொண்ட பல்வேறு உத்திகளையும் நம் முன் வைப்பார். காப்பிய வளர்ச்சியில் காலத்திற்கேற்ற கோலங் களின் வளர்ச்சி நிலைகளைக் காட்டி நம்மை வியக்க வைப்பார். கம்பன் என்ற காப்பியப் பொறிஞரின் வரலாற்றைச் சிறிது விளக்குவார்.

இதுகாறும் நின்று கொண்டே நம்மைக் கேட்க வைத்த ஆசிரியர், கம்பன் காவிய மாளிகைக்குள் இட்டுச் செல்வார்;

இங்கும் நின்று கொண்டு வான்மீகியின் மாளிகையுடன் இதனை ஒப்பிட்டுக் காட்டுவார்; இரண்டின் வார்ப்பு ஒன்று போல் காணப்படினும், இரண்டின் கட்டுக்கோப்பிலுள்ள சிறுசிறு மாற்றங்களையும் நுணுக்கமாகச் சுட்டியுரைப்பார். கம்பன் மாளிகையில் ஆழ்வார்களிடம் பெற்ற அரும்பொருள்களை இழைத்துக் காட்டிய பெருமையைப் புலப்படுத்துவார். போகிற போக்கில் துளசியின் மாளிகையையும், காளிதாசனின் இரகுவம்சத்தையும் கம்பன் படைப்போடு ஒப்பீடு செய்து கொண்டே போவார். மலையாள எழுத்தச்சன், தெலுங்கு அரங்கநாதன் இவர்கள் மாளிகைகளுடனும் ஒப்பிட்டுக் காட்டுவார். கம்பன் மாளிகையில் அமைந்த ஆறு பெரும்பகுதிகளையும் ஒவ்வொன்றிலுமுள்ள சிறுசிறு பகுதிகளையும் நுணுக்கமாகக் காட்டி அவற்றின் சிறப்புகளை விளக்குவார். சுந்தர காண்டத்தில் நுழையும்போது மாளிகைக்குள் இன்னொரு சிறு மாளிகை அமைந்திருப்பதன் சிறப்பையும் (பின்னோக்கு உத்தி) புலப்படுத்துவார். காப்பிய மாளிகையில் அரிய களங்களையும் இன்மைக் களங்களையும் சுட்டுவார். கம்பன் மாளிகையில் பல்வேறு பகுதிகளிலும் நம்மை வேகமாக ஒருமுறை இட்டுச் சென்றபின், மேலும் மேலும் அவற்றில் பல சுற்றுகளை மேற்கொள்வார்.

ஒரு சுற்றில் காப்பியத்தின் தலைமையாக இருக்கும் இராமன் சீதை இவர்களை அறிமுகம் செய்து வைத்து அவர்களுடைய அரும்பெரும் இயல்புகளைப் பாராட்டுவார். இவர்களைப் பற்றிக் காவிய மாளிகையில் உள்ள பலர் பாராட்டியுரைப்பதை எடுத்துக்காட்டுவார். இராமனைச் சுட்டும்போது 'காசு இல் கொற்றத்து இராமன்', 'நடையின் நின்றுயர் நாயகன்', 'குணங்களால் உயர்ந்த வள்ளல்', 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன இராமன்' 'மும்மையாம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன்', 'ஓவியத்தெழுதவொண்ணா உருவத்தன்' 'யார்க்கும் இறையவன் இராமன்' என்று பலர் தந்த சான்றிதழ்களைத் தனித்தனியாக எடுத்துக் காட்டுவார். சீதையைச் சுட்டும்போது அழகெனும் அணியும் ஓர் அழகு பெற்ற அற்புதத்தைப் புலப்படுத்துவார். பொற்பினுக்கு அணியாகவும், புகழின் சேர்க்கையாகவும், கற்பினுக்கு அரசியாகவும் இருப்பதைச் சுட்டுவார்; இந்த மயிலுடைச் சாயலாள்—மிதிலைச் செல்வி—சிறையிருந்தமையால் ஏற்றம் பெறுகின்றாள் என்று முத்தாய்ப்பாகப் பேசுவார்; அநுமன் பேச்சால் கற்பு களிநடம் புரிந்ததை எடுத்துரைப்பார். 'திட்டிவிட

மன்ன கற்பின் செல்வி' என்ற கும்பகருணனின் வாக்கை நினைவூட்டுவார். எதிர்த் தலைவனான இராவணனின் மாட்சியையும், இராமனுக்கு நிகரான பெருமையுடையவன் அவன் என்பதையும், 'கற்பின் கனலியை' தன் இதயத்தில் சிறை வைத்தமையே அவன் வீழ்ச்சிக்குக் காரணம் என்பதையும் நயமாக எடுத்துரைப்பார். அவலத் தலைவனின் பண்புகளெல்லாம் கொண்டவன் இராவணன் என்பதைச் சுட்டுவார்.

இரண்டாவது சுற்றில் துணைப் பாத்திரங்களை—சிறு மாந்தர்களை—அறிமுகம் செய்வார். இவர்களை ஒன்றிய பாத்திரங்கள், ஒட்டிய பாத்திரங்கள், ஊன்றிய பாத்திரங்கள் (பக். 235-36) என்று வகைப்படுத்தியும் காட்டுவார். முதல் பிரிவில் இலக்குவன், பரதன், அநுமன், இந்திரசித்தன், கும்பகருணன், கைகேயி இவர்களையும்; இரண்டாம் பிரிவில் சூர்ப்பனகை, சுக்கிரீவன் இவர்களையும், மூன்றாம் பிரிவில் வீடணன் முதலியோரையும் எடுத்துக்காட்டுந் திறன் மிகவும் பாராட்டத்தக்கது. சிறு பாத்திரங்கள் பெரிய காவிய நிகழ்ச்சிக்கு அடிப்படையாக, திருப்பு மையமாக இருப்பதைச் சுட்டிச் செல்லும் பாங்கு மிகவும் பாராட்டத்தக்கது. கம்பன் காவியத்தில் 52 சிறு பாத்திரங்கள் இருப்பதாகக் கூறி அவர்களில் 18 பேர்களை அறிமுகம் செய்து வைக்கின்றார். இவர்களின் முரண்பாடுகளைச் சுட்டிக் காட்டுவது (பக். 282) பாராட்டத்தக்கது.

மூன்றாவது சுற்றில் காப்பியப் பண்பாகிய பாவிகம், அரசியல், பொருளாதாரச் செய்திகள், அரக்கர், தேவர், வானர உலகங்கள், கம்பன் காட்டும் தமிழ்ப் பண்பாடு, மெய்ப்பாடுகள், அணிவகைகள், இவை யாவும் நன்கு காட்டப் பெறுகின்றன. கம்பனின் சொல்லாற்றல், திறமையாகக் கையாளும் யாப்பு வகைகளைப் (பக்.316-17) பட்டியலிட்டுக்காட்டி 'விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்' என்ற உண்மையை மெய்ப்பிக்கின்றார். கம்பன் கையாளும் கற்பனை வகைகள் (பக். 328-29) அறிவியல் நோக்கில் பாகுபடுத்திக் காட்டப் பெறுகின்றன. காவியத்தில் வரும் கிளைக்கதைகள், துணைக்கதை, தனிக்கதை என வகைப்படுத்தப் பெற்று விவரமாகக் காட்டப் பெறுகின்றன. அகலிகை, வாலி, இரணியன் இவர்களின் வரலாறுகள் தனியே ஆயப் பெறுகின்றன. பல்வகைப் போர் முறைகள், போர் நெறிகள் தெளிவாக்கப் பெறுகின்றன.

கம்பனின் பல்துறைப் புலமை கவின்பெறக் காட்டப் பெறுகின்றது.

ஊடு கதிரால் (X—ray) மனித உடல் அமைப்பைப் படம் எடுத்துக்காட்டுவது போல், இந்நூலாசிரியர் திரு. கமலக் கண்ணனின் பார்வை நூல் முழுவதும் நன்கு ஊடுருவிச் சென்று பல அற்புதமான படங்களை எடுத்து விடுகின்றது. இந்தப் படங்களின் தொகுப்பொட்டிதான் (Album) 'உலகப் பெருங் கவிஞர் கம்பர்' என்ற ஆராய்ச்சிப் பனுவல். இதிலுள்ள செய்திகளையும் இன்னும் ஆழ்ந்த நோக்கில் திரட்டும் செய்தி களையும் ஆய்வுக் கட்டுரை அமைய வேண்டிய நெறி முறை களைக் கொண்ட அச்சில் வார்த்து எடுத்தால் இது டாக்டர் பட்டத்திற்குரிய(Ph.D) சிறந்த ஆய்வுக் கட்டுரையாக அமையும். இதுகாறும் தமிழில் வெளிவந்த, வெளிவர இருக்கும் ஒப்பற்ற ஒரு சில ஆய்வுக் கட்டுரைகளில் ஒன்றாகத் திகழும். ஆசிரியரின் உழைப்பு பெருகவும், அவருடைய இலக்கிய ஆய்வுப் பணி சிறக்கவும் 'பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்ட லின்' தன்னருள் சுரக்கவும் அவன் திருவடிகளை நினைந்து வாழ்த்துகின்றேன்.

அண்ணா நகர்
சென்னை—600 040 } ந. சுப்பு ரெட்டியார்.

# சிறப்புரை

சிலம்பொலி சு. செல்லப்பன், எம்.ஏ., பி.டி., பி.எல்.

'உலகப் பெருங்கவிஞர் கம்பர்' என்னும் இப் பெரு நூலை ஆசிரியர் இரா. வ. கமலக்கண்ணன் மிகவும் சிறப்புறப் படைத்துள்ளார். தாம் எடுத்துள்ள தலைப்பைப் பல்வேறு பகுதிகளாகப் பகுத்துக் கொண்டு, ஒவ்வொரு பகுதியையும் விளக்கமாகவும் ஆராய்ச்சித் திறனுடனும் ஆசிரியர் எழுதியுள்ளமை பெரிதும் பாராட்டுக்குரியது.

### காப்பிய இலக்கணம்

காப்பியம் இலக்கிய வகைகளுள் ஒன்று என்பதையும், அதற்கெனத் தனி இலக்கணம் வகுக்கப்பட்டிருப்பதையும், காப்பிய வகைகள் பற்றியும் விரிவாக ஆராய்ந்து அதன் தொகுப்பாகப் "பொருட் செறிவுள்ள கதையிலிருந்து, தெரிந்தெடுத்த நிகழ்ச்சிகளைக் கொண்டு, ஒருமை நலம் ஓங்குவதாகப் புலவன் அமைத்துக் கொண்ட கட்டுக்கோப்பில், சமுதாயத்துக்கு முக்கியமான அருஞ்செயல்களை இயற்றும் நாயகனை உடையதாய், அகன்ற வீச்சும், கருத்தாழமும், உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் பண்புமுடைய நெடுங் கவிதையில் உயிர்த்தெழுவது காவியம் எனலாம்"[1] என ஆசிரியர் புலப்படுத்துகிறார்.

தமிழ்க் காப்பியங்கள் தண்டி கூறும் இலக்கணத்திற் கேற்பவே அமைந்திருக்கின்றன. தொல்காப்பியத்தில் காப்பியத்திற்கான இலக்கணம் கூறப்படவில்லை. "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்ப வேண்டுமாதலின் தொல்

---

1. இந்நூலின் பக். 25

காப்பியருக்கு முன்னர்த் தமிழில் காப்பியங்கள் இல்லை. எனவே அவர் காப்பியம் பற்றி இலக்கணம் வகுக்கவில்லை''[1] என்பது ஆசிரியரின் துணிபு.

காப்பியத் தோற்றம்

வீறார்ந்த காலத்தில்தான் காப்பியங்கள் தோன்றும். சங்ககால வாழ்வு வீர வாழ்வாகவே விளங்கியிருந்தது. எனினும் அக்காலத்தில் காப்பியங்கள் தோன்றாதிருப்பது வியப்பே என ஆசிரியர் கூறுவதை[2] எண்ணி ஆய்தல் வேண்டும். கி. பி. 2 ஆம் நூற்றாண்டிற்குப் பின் இடைக்காலம் வரை தமிழ்ச் சமுதாயத்தில் வீர வழிபாட்டுணர்ச்சி மிக்கிருந்ததால் காப்பியங்கள் மிகுதியாகத் தோன்றின எனலாம்.[3]

முதற் காப்பியங்கள்

ஹோமர், காப்பியம் என்னும் இலக்கிய வகையை மேனாட்டிற்குத் தந்தவர். இவர் இயற்றிய ஒதீசி, இலியத் ஆகிய இரட்டை காப்பியங்கள்தாம் கிரேக்க இலக்கியத்தின் ஆதி காவியங்கள். தமிழின் முதற் காப்பியங்கள் சிலம்பும் மேகலையும் ஆகும். ஹோமரின் காப்பியங்கள் வெறும் வீரத்தையும் காதலையுமே பாடுகின்றன; ஆனால் நம். நாட்டுப் பெருங்காப்பியங்களோ ஒழுக்கத்திற்கு முதன்மை யளிக்கின்றன[4] என மேனாட்டு, தமிழ்நாட்டு முதற் காப்பியங் களுக்குள்ள வேறுபாட்டை நூலாசிரியர் தெளிவுபடுத்துகிறார்.

தமிழ்க் காப்பியங்கள்

சிலப்பதிகாரம் தமிழில் தோன்றிய முதற் காப்பியம். அதனையடுத்து மணிமேகலை தோன்றியது. பின்னர் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் பெருங்கதையும், 9 ஆம் நூற் றாண்டின் முற்பகுதியில் சீவக சிந்தாமணியும் பிற்பகுதியில் இராமாயணமும் தோன்றின. அடுத்து 10 ஆம் நூற்றாண்டில் சூளாமணியும் கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் பெரிய புராணமும் தோன்றின.

தமிழில் ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் என்ற பாகுபாடு உள்ளது. இது பொருத்தமாக இல்லை என்பதற்கான காரணங்களை எடுத்தியம்பிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, சூளாமணி என்ற ஐந்துமே,

---

1. பக். 31 2. பக். 31 3. பக். 32 4. பக். 48.

ஐம்பெருங்காப்பியமெனச் சொல்லப்பட்டிருக்கலாம் என்ற முடிவுக்கு ஆசிரியர் வருகிறார்.[1]

காப்பிய மரபு வளர்ச்சி

சங்க காலத்தில் அரசர்களையே தலைவர்களாகக் கொண்டு பாடிய நிலை மாறி, சிலம்பு குடிமக்களைத் தலைவர்களாகக் கொண்டு எழுந்தது.[2] மணிமேகலை ஆசிரியரோ இளம் பெண் துறவியான மணிமேகலையைத் துணிந்து காப்பியத் தலைவியாக்கி, மன்னர்கள் செய்ய முடியாத செயலை—பசியும் பிணியும் நீக்கும் செயலை—தன்னலமற்ற ஒரு துறவியின் தொண்டு செய்ய முடியும் எனக் காட்டினார்.[3] தமிழ்மொழியில்தான் பெண்ணுக்கு ஏற்றம் கற்பிப்பதற்கென்றே முதற் காப்பியங்கள் எழுந்தன.[4] மணிமேகலை தோற்றுவித்த மரபைப் பின்பற்றிக் குண்டலகேசி, நீலகேசி, வளையாபதி ஆகியவை குடிமக்களுள் ஒருவரைத் தலைவராகக் கொண்டு தோன்றின; எனினும் அவை சமய வாதங்களைப் பெருகப் பேசிச் சமுதாயத்தை மறந்தன.[5] மக்களுள், அவருள்ளும் பெண்களைத் தலைமாந்தராகக் கொண்டு நிலை பெற்றிருந்த காப்பிய மரபு மாறி, அரசருள் ஒருவரைத் தலைவராகக் கொள்ளும் மரபைப் பெருங்கதை தோற்றுவித்தது. கம்பரும் இம்மரபையே பின்பற்றினாலும் அவதாரமாகிய இராமனைக் காப்பியத் தலைவனாக்கினார். ஆயினும் மானுடம் வென்றது என்னும் மானிடப் பொதுமைப் பண்பைக் கூறுவதே அவர் நோக்கமாயிற்று.[6] அடுத்து வந்த சேக்கிழாரோ ஆள் முக்கியத்துவம், உயர்ந்தோர் தலைமை, தன்னிகரற்றோர் தலைமை ஆகியவை இன்றியும் காப்பியம் நடக்கும் என்பதை நிலைநாட்டினார்.[7]

இவ்வாறாகக் காப்பிய வளர்ச்சி நிலையையும், மரபு மாற்றங்களையும் ஆசிரியர் நன்கு தெளிவாக்குகிறார்; அடுத்து முதற் காப்பியங்களான சிலம்பு மேகலையின் ஒற்றுமை பற்றியும் சமண, சைவக் காப்பியங்களின் பொது இயல்புகள், தனி இயல்புகள் பற்றியும் விரிவாகப் பேசுகிறார்.

காப்பிய அமைப்பு

காப்பியம் என்பது பேரிலக்கிய மாளிகை. அதன் சிறப்பு உரிய இடத்து உரிய பொருளை உரிய அளவில் அமைக்கும்

---

1. பக். 59 2. பக். 50 3. பக். 51. 4. பக். 52 5. பக். 52 6. பக். 53. 7. பக். 56.

முறையில் உள்ளது.[1] காப்பியத்தின் உயிர்நாடி கதை. கதை எதுவாயினும் இருக்கலாம். அதைச் சொல்லும் முறையிலே தான் அது சிறப்படைகிறது. கதைகளைச் சொல்லும்போது நிகழ்ச்சிகளை முன் பின்னாக அமைத்து, காரண காரிய இயை பிருக்குமாறு செய்ய வேண்டும். இதுவே கதைப் பின்னல் (Plot)[2] எனப்படும். காப்பியத்தின் உட்பிரிவு சுருக்கம், இலம்பகம், பரிசேதம் என்பன. காண்டம் என்பது பேருறுப்பு; பல சிற்றுறுப்புகளின் தொகுதி. சிற்றுறுப்புகள் காதை, அத்தியாயம், படலம் என்றும் இருப்பதுண்டு. இத்தகைய காப்பிய உறுப்புகள் சிலம்பு, மேகலை, கம்பன், பெரியபுராணம் ஆகியவற்றில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை ஆசிரியர் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

மேற்சொன்ன காப்பியங்கள் தண்டியலங்காரம் பெருங் காப்பியத்திற்கு வகுத்துள்ள இலக்கணத்திற்கு எந்த அளவு பொருந்தி வருகின்றன என்பதை விளக்கமாகப் பார்த்து, ஆசிரியர், ''காப்பியச் சுவை எனும் நோக்கில் பார்க்குங்கால் சிலம்பும் கம்பனும் முன்னணியில் நிற்பனவாம்'' என்ற முடிவுக்கு வருகிறார்.[3]

### காப்பிய உத்தி

ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்குக் கைக்கொள்ளும் கலை நுணுக்கக் கூறு-தொழில் துறை நுட்பமே உத்தி எனப்படும். ஒவ்வொரு கவிஞனின் தனித்தன்மையும் இவ்வுத்திகளை மேற்கொள்ளும் முறையில் வெளிப்படுகிறது.[4] இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படையாக அமையும் பொருள் (Content), வடிவம் (External structure), வெளியீடு (Expression) ஆகிய மூவிடத்தும் உத்திகள் இடம் பெற வாய்ப்பு அதிகமா கின்றது.[5] தொல்காப்பியம், நன்னூல், மாறனலங்காரம் ஆகிய மூன்றும் இவ்வுத்திகட்குப் பட்டியல் தருகின்றன. பொதுவாக உத்திகள் 32 என்பர். இளங்கோ, சாத்தனார், கம்பர், சேக்கிழார் ஆகிய கவிஞர் பெருமக்கள் மேற்கொண்ட சிறப்பான காப்பிய உத்திகளை, ஆசிரியர் பலபட எடுத்துச் சொல்லிச் செல்கிறார்.

### கம்பராமாயணத் தோற்றம்

தமிழிலக்கிய வரலாற்றில் பொற்காலம் எனப் போற்றப் படும் காலங்கள் இரண்டுண்டு; ஒன்று சங்க காலம்; மற்றொன்று

---

1 பக். 72 2. பக் 73 3. பக். 111 4. பக். 113 5. பக். 114

பிற்காலச் சோழர் காலம்; சங்க காலத்தில் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்கள் தோன்றின. சங்க காலத்தை யடுத்துக் களப்பிரர் காலத்தில் தமிழிலக்கிய வளர்ச்சி தடைப் பட்டது. பிற்காலச் சோழர் காலத்திலோ இலக்கியம் சீரிய வளர்ச்சியைப் பெற்றது. சிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி, பெரியபுராணம், கச்சியப்பரின் கந்தபுராணம் ஆகிய காப்பியங்கள் இக்காலத்தே தோன்றின.[1]

**கம்பர் காலம்**

இவ்வாறு இதுவரை காப்பியங்கள் பற்றிப் பொதுவாகப் பேசிவந்த ஆசிரியர், இனி, தாம் எடுத்துக் கொண்ட கவிஞர் கம்பர் பற்றியும் அவருடைய காப்பியம் பற்றியும் ஆராய முற்படுகிறார். கம்பர் தஞ்சை மாவட்டம் தேரழுந்தூரில் பிறந்தவர் என்பது பொதுக் கருத்து. இதுவரை ஆய்ந்த அறிஞர்கள் கம்பர் காலம் கி.பி. 9ஆம் நூற்றாண்டு, கி.பி. 10ஆம் நூற்றாண்டு, கி.பி. 12ஆம் நூற்றாண்டு என மூவகையாகக் குறிப்பிட்டுள்ளனர்.[2] இந்நூலாசிரியர் கம்பர் காலம் பற்றி மிக விரிவாகக் கம்பர் தனியன்களின் அடிப்படை யிலும் பிற அக, புறச் சான்றுகளைக் கொண்டும் ஆராய் கிறார்.[3] அதன் பயனாகக் கம்பராமாயணம் கி.பி. 880-க்குச் சற்று முன்னர் எழுந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருகிறார்.[4] 12, 10ஆம் நூற்றாண்டு எனச் சொல்வார் கருத்துகள் எவ்வாறு பொருந்தா என்பதையும் விளக்கமுறச் சொல்கிறார்.

**கம்பரும் வான்மீகியும்**

கம்பர் தம் காப்பியத்திற்கு முதனூலாக வான்மீகியைக் கொண்டாலும், அந்நூலுள் காண்பவற்றைச் சுருக்கியும், நீக்கியும், வேண்டுவனவற்றை மாற்றியும் தம் காப்பியத்தை இயற்றியுள்ளார் என ஆசிரியர் குறிப்பிட்டு, அவ்வாறு அவர் செய்துள்ள இடங்கள் எவையெவை என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளார்.[5]

**கம்பருக்கு முன்னே இராமாயணக் கதை**

சங்க காலத்தில் அகநானூறு, புறநானூறு, சிறுபாணாற்றுப் படை, மதுரைக் காஞ்சி ஆகியவற்றில் இராமாயணக் கதைப்

---

1. பக். 145 2. பக். 148 3. பக். 147-73 4. பக். 173 5. பக். 174-81

பகுதிகள் சுட்டப்பட்டுள்ளன. சிலம்பு, மணிமேகலையிலும் சில செய்திகள் குறிக்கப்பட்டுள்ளன. ஆழ்வார் பாடல்களிலும் இராமாயணக் கதைக் குறிப்புகள் உள்ளன. எனினும் தமிழில் கம்பர் காலத்திற்கு முன்னர் முழுமையாக இராமாயண நூல்கள் இருந்தன எனக் கொள்ள முடியாது என்பதை ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.[1]

### ஒப்பீடு

ஆசிரியர், காளிதாசனின் இரகுவம்சத்தோடு கம்பராமாயணத்தை ஒப்பிடுகிறார். இருவருக்கும் முதனூல் வான்மீகமே. இரகுவம்சம் இராமன் பிறந்த சூரிய குலத்தில் தோன்றிப் பல மரபினரைப் பற்றிக் கூறுவதாகும். இரகுவம்சத்தில் காப்பியத் தலைவர் பலர்; இராமாயணத்தில் இராமன் ஒருவன் மட்டுமே. இரகுவம்சத்தில் பல கதைகளுள் இராமன் கதை ஒன்று; ஆனால் இராமாயணத்திலோ இராமன் கதை மட்டுமே உள்ளது.[2]

மலையாளத்தில் எழுத்தச்சன் எழுதியுள்ள இராமசரிதம்[3], தெலுங்கில் அரங்கநாதன் என்பவர் இயற்றியுள்ள இராமாயணம்[4] ஆகியவற்றோடும் கம்பராமாயணத்தை ஆசிரியர் ஒப்பிட்டுள்ளார்.

### இராமாயணக் கதை

அடுத்து, கம்பராமாயணத்தின் காண்டங்களில் அமைந்துள்ள கதைச் சுருக்கத்தையும், அக்காண்டங்கட்கு அப்பெயர் ஏற்பட்டதற்குக் காரணத்தையும் ஆசிரியர் விளக்குகிறார்.[5] இதில் சுந்தர காண்டம் காவியத்துள் காவியம் எனும்படிக் காவிய இலக்கணங்கள் கொண்டிருப்பதையும் காட்டுகிறார்.[6]

### தலைமை மாந்தர்கள்

காப்பியத்தில் பாத்திரப் படைப்பை ஆராயும்போது (i) பாத்திர அறிமுகம் (ii) அப்பாத்திரம் பெற்றுள்ள பங்கு (iii) அதனால் வெளிப்படும் பண்பு நலன் (iv) அப்பாத்திரத்தில் ஆளுமை என நான்கு நிலைகளைக் காண வேண்டுமெனக் கூறி ஆசிரியர் முதலில் இராமாயணத் தலைமைப் பாத்திரங்களை ஆய்கிறார்.[7]

---

1. பக். 179 2. பக். 189-190 3. பக். 190 - 19
4, பக்,191 5. பக். 192-207 6. பக், 198, 7, பக். 209,

"காவியத் தலைவன் நலம்பல செய்கின்றவனாக அமைய வேண்டும்; நல்லன செய்யும்போது அல்லன குறுக்கிடும்; அவை களைக் கடந்து, கொண்ட கொள்கை விடாது, குறிப்பன செய்து முடித்து, நன்மைக்கு உண்மைக்கு என்றும் அழிவில்லை என்று காட்டக் கூடியவனே காவியத் தலைவன்"[1] என்னும் பொது இலக்கணத்திற்கு இராமன் எவ்வாறு இலக்கியமாய்த் திகழ்கிறான் என்பது விளக்கப்பட்டுள்ளது. சீதை இளமையில் பேதையாகவும், பின் வீரம் செறிந்த பெண்ணாகவும், பின் நற்பெருந் தவத்தளாகவும், கற்பின் கனலியாகவும், பெண் ணினம் போற்றும் தெய்வமாகவும் வளர்ந்து பொலிவதும் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.[2]

நன்மை, பல சோதனைக்கு உள்ளாகி முழு இன்பம் அடையும்; தீமை ஆரவாரம், படாடோபம் கொண்டு தோன்றி ஆர்ப்பரித்து வீழும். காவியத்தில் முரண்பட்ட தலைவர்களைக் கொண்டு இதனை விளக்குவர். அந்த முறையில்தான் இராமா யணத்தில் எதிர்வினைத் தலைவன் இராவணன் படைக்கப் பட்டுள்ளான்.[3]

### துணைப் பாத்திரங்கள்

காப்பிய மாந்தர்கள் தலைமைப் பாத்திரங்கள், துணைப் பாத்திரங்கள் என இருவகைப் படுவர். துணைப் பாத்திரங்கள் மூவகைப்படுவர். காப்பியத் தலைவன் தலைவியரோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்களை ஒன்றிய பாத்திரங்கள் எனலாம்; கதை மாந்தரைப் புரிந்து கொள்ள உதவும் வகையில் அவர்களோடு ஒட்டியும் ஒட்டாமலும் நிற்பவர்களை ஒட்டிய பாத்திரங்கள் எனலாம்; காப்பியக் கதைப் போக்கில் சிறிதளவே இடம் பெற்றுக் கதைமாந்தரின் பண்பு நலன்களை அறிய உதவுபவர்களை 'ஊன்றிய பாத்திரங்கள்' எனலாம். இவ்வகையில் முதற்பிரிவில் இலக்குவன், பரதன், அனுமன், கைகேயி, இந்திரசித்தன், கும்பகருணன் ஆகியோரும் இரண்டாம் பிரிவில் சூர்ப்பனகை, சுக்ரீவன் ஆகியோரும், மூன்றாம் பிரிவில் வீடணனும் இந்நூலுள் காட்டப் பட்டுள்ளனர்.[4]

### சிறுபாத்திரங்கள்

அடுத்து ஆசிரியர் இராமாயணச் சிறுபாத்திரங்களைப் பற்றிக் கூறப் புகுகிறார். மிகப் பெரிய பாத்திரத்தில் நீர்

1, பக். 207 2 பக். 227 3 பக். 227 4 பக். 235-254

இருந்தால் அதை அப்படியே எடுத்துக் குடிக்க முடியாது. எடுத்துக் குடிக்க ஒரு சிறு பாத்திரம் தேவைப்படும். அது போன்றே தலைமைப் பாத்திரங்களின் பண்பு நலன்களைத் தூய்த்தறியச் சிறு பாத்திரங்கள் துணை செய்கின்றன என்பர். அவ்வகையில் கம்பனில் 52 சிறு பாத்திரங்கள் உள்ளன எனக் கூறி, அவர்களுள் தசரதன், சுமித்திரை, கோசலை, சத்துருக் கனன், வசிட்டன், விசுவாமித்திரன். குகன், சடாயு, மாரீசன், அதிகாயன், விராதன், நீலமாலை, மந்தரை, மண்டோதரி, தாடகை, திரிசடை, சவரி, தாரை எனப் பதினெட்டு பேரைப் பற்றிய செய்திகள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.[1]

இயற்கையிறந்த தெய்வப் பாத்திரங்கள் காப்பியத்தில் இடம் பெறுவதையும், காப்பியத்தில் அவற்றின் தேவை பற்றியும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.[2]

பாவிகப் பண்புகள்

பாவிகம் என்பது காப்பியத்தில் கவிஞனால் சொல்லப்படும் குணம். கவிஞன் தான் மேற்கொண்டுள்ள காப்பியத்தில் பல படியாக வற்புறுத்தி, அமைக்கும் அறிவுரைகளே. காப்பியக் குணம் எனப்படும். கவிஞன் தன் உள்ளக் குறிப்பில் எந்தச் சிறப்புக் கருத்தைக் கதை வாயிலாக உருப்படுத்திக் காட்டு கிறானோ அக்கருத்தையே பாவிகம் என்று சொல்லலாம். கம்பனில், அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பதும், பிறன் மனை விழையாமையும், உடன்பிறப்பின் சிறப்பும், பெண்மை யின் சீர்மையும், அடைக்கலப் பெருமையும், தொண்டின் உயர்வும் பாவிகப் பண்புகளாக அமைந்துள்ளன என்பது இந்நூலுள் விளக்கம் பெறுகிறது.[3]

அரசியல் பொருளாதாரச் சிந்தனைகள்

அடுத்து, ஆசிரியர் கம்பரின் அரசியல், .பொருளாதாரச் சிந்தனைகளைத் தொகுத்துத் தருகிறார். மக்கள் உடல்; மன்னன் உயிர் என்னும் கருத்தை மாற்றி .மக்கள் உயிர்; மன்னன் அவ்வுயிர் தங்கும் உடலென மாற்றிக் கம்பர் புரட்சி செய்கிறார்;[4] அமைச்சர்களை அரசியல் வண்டியை நன்னெறியில் இழுத்துச் செல்லும் காளைகள் என்கிறார்.[5] எல்லாரும் எல்லாச் செல்வமும் எய்தியிருத்தல் வேண்டு மென்பதே கம்பரின் பொருளாதாரக் கருத்தாம். கம்பன் கண்ட சமுதாயத்தில் அறமும், ஒழுக்கமும் அடிப்படைப் பண்புகளாக

---

1. பக். 255-280 2 பக். 280-281 3 பக். 283-84 4 பக். 284
5 பக். 287.

விளங்கின;[1] ஒழுக்கம் கடவுளினும் உயர்ந்தது; கற்பு ஆண்டவன் அருளினும் மிக்கது; ஆடவரோடு பெண்டிரும் கல்வி கற்றனர்; மக்கள் மருந்தினும் இனிய கேள்வியைச் செவியுற மாந்தினர்; நுண் கலைகளில் சிறந்து இன்பமாகப் பொழுது போக்கினர். கல்வி மரத்தில், கேள்வியாகிய கிளைகள் தோன்றி, தவமெனும் தளிர்கள் விட்டு, அன்பாகிய மொட்டுத் தோன்றி, அறமாக மலர்ந்து, போகமாகிய கனி பழுத்துப் பயன் விளைப்பதே கம்பன் கண்ட இராமராச்சியம் ஆகும்.[2]

**பாண்பாட்டுக் கருவூலம்**

கம்பராமாயணம் ஒரு பண்பாட்டுக் கருவூலம். செய்நன்றி போற்றுதல், விருந்தோம்பல், அனைவரையும் அன்பால் பிணைத்தல், கற்பெனும் திண்மையோடு வாழ்தல், பிறனில் விழையாமை, மானம் போற்றுதல், புகழ்பட வாழ்தல், தீவினை செய்ய அஞ்சுதல், கள்ளுண்ணாமை போன்ற சிறந்த தமிழ்ப் பண்புகள் அமையத் தம் காவியத்தைக் கம்பர் யாத்துள்ளார்.[3] அறம், ஒழுக்கம் எனும் இரு பெரும் கருத்துகளின் விளக்கமே இராமாயணம்.

**மெய்ப்பாடுகள்**

தொல்காப்பியம் கூறும் எண்வகை மெய்ப்பாடுகளையும் கம்பர் தம் காப்பியத்தில் சிறப்புற அமைத்துக் காட்டியுள்ள இடங்களை ஆசிரியர் சுட்டியுள்ளார். தொல்காப்பியர் 'கற்பு' என்பதைக் காட்டலாகாப் பொருள் என்றார்! ஆனால் அனுமனைக் ''கற்பு களி நடம் புரியக் கண்டேன்'' எனக் கூறச் செய்ததன் வழி மெய்ப்பாடுகளால் கற்பினை அறியலாகும் என மெய்ப்பாட்டியலுக்கு ஒரு திருத்தத்தைக் கம்பர் தருகிறார்.[4]

**உவமை, உருவகம், சொல்லாட்சி**

ஒரு கதையின் வெற்றிக்கு அடிப்படை கவிஞர் பயன்படுத்தும் உவமைகளும் உருவகங்களுமேயாம். கம்பன் காவியத்தில் உள்ள உவமைகள் எண்ண எண்ணத் தித்திப்பனவாம். ஒரு சூழ்நிலையின் தன்மையையும், உணர்ச்சி ஆழ்மையையும் உருவாக்கக் கவிஞன் சொற்களைக் கூர்மையாகவும் தெளிவாகவும் பயன்படுத்துவான். சொல்லை ஆய்ந்து பயன்படுத்துவதே சொல்லாட்சி என்பதாம்! கம்பனது காவியம் முழுவதிலும் அரிய சொல்லாட்சி நிரம்பியுள்ளதைப் பல காட்டுகளால் ஆசிரியர் நமக்குப் புலப்படுத்துகிறார்.[5]

---

1. பக். 289 2 பக். 289—91 3 பக். 295 4 பக், 307 — 08
5 பக். 313—15

**யாப்பு வகைகள்**

கம்பர் தம் நூலுக்குப் பெரிதும் தகவுடைய பாவாகக் கொண்டது கலி விருத்தம்: அதற்கடுத்த நிலையில் அறு சீர் விருத்தம் அமைகிறது. இந்திரன் துதியாக 6 பாடல்கள் எண் சீர் விருத்தத்தில் உள்ளன. எழுசீர் விருத்தங்களைக் கம்பர் துன்ப நிலையின் பெருக்கிற்கோ, துன்ப முடிவுக்கோ பயன் படுத்துகின்றார். பாடல்களில் ஏறக்குறைய 22 பாடல்களுக்கு ஒருமுறை சந்தங்களை மாற்றும் போக்கைக் காண்கிறோம் என யாப்பு வகை பற்றிச் சொல்வதோடு கம்பனில் காணும் பாவகைகள் பற்றிய ஒரு பட்டியலையும் ஆசிரியர் தந்துள்ளார்.[1]

மேலும் இயற்கை வருணனை, கற்பனை ஆகியவற்றை நம் உள்ளம் கொள்ளை கொள்ளும் வகையில் தந்துள்ளதையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

**கிளைக் கதைள்**

இராமாயணத்தில் பல கிளைக் கதைகள் மூலக்கதையோடு பின்னிப் பிணைந்து பிரிக்க முடியாதவையாக அமைந்துள்ளன. அகலிகை சாப நீக்கம், துந்துபியின் எலும்பை எற்றியது, கலைக்கோட்டு முனிவன் வரலாறு, இரணியன் வதை போன்ற பல கிளைக் கதைகள் இராமாயணத்தில் உள்ளன. இராம காதை பல கிளைக்கதைகள் கொண்ட ஒரு பேரால மரமாகக் காட்சியளிக்கிறது. அடிமரமான மூலக்கதையைத் தாங்கும் பெரு விழுதுகளாக இக்கிளைக் கதைகள் அமைந்து, காப்பியக் களனில் ஊன்றி வளர்ச்சி விரிய வாய்ப்பளிக்கின்றன என ஆசிரியர் கூறியிருப்பது[2] முற்றிலும் உண்மையாகும்.

**வீரப்பெருமை**

ஹோமருடைய பெருமையெல்லாம் அவன் வீரத்தை வெகுவாகப் பாடியுள்ளான் என்பதே. அவனுக்கு இணையாக வீரத்தைச் சிறப்பித்துப்பாடிய புலவர்கள் அவனுக்கு முன்னு மில்லை பின்னுமில்லை எனக் கூறுவர். கம்பரின் யுத்தகாண்டம் ஹோமரின் இலியதுக்குப் பரப்பிலும் நீட்சியிலும் இணை யானது என்பதை விளக்கும் முறையில் கம்பர் பாடியுள்ள யானைப் போர், தேர்ப் போர், மாயப் போர், இராமன்-தாடகைப் போர், இராமன்-கரன், தூடணன், திரிசிரா போர், வாலி - சுக்கிரீவன் போர் ஆகியவற்றைச் சிறப்பாக விவரித் துள்ளார்.[3]

---

1. பக். 315-320 2. பக். 332-339 3. பக். 340-349.

**கல்வியிற் பெரியர் கம்பர்**

'கல்வியிற் பெரியர் கம்பர்' என்பதை மெய்ப்பிக்கக் கம்பர் கொண்டிருந்த பல்துறைப்புலமையை ஆசிரியர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். கம்பர் தமது காவியத்தில் ஏறத்தாழ 46 பறவை வகைகளையும், 32 விலங்கு வகைகளையும், 29 மீன் பூச்சிகள் முதலிய பிற உயிர் வகைகளையும் பாடியுள்ளார்.[1] கம்பருடைய தாவர நூற் புலமையும் அவர் உயிரினங்கள் பற்றித் தந்துள்ள செய்திகளும் அவருடைய பரந்து பட்ட அறிவைக் காட்டுகின்றன.

**வளர்க கமலக்கண்ணன்!**

மேலே சொன்ன அனைத்தும் இந்நூலுள் ஆசிரியர் கூறியுள்ளவற்றின் பிழிவாகும். திரு. கமலக்கண்ணன் அவர்கள் இந்நூலை அரிதின் முயன்று ஆக்கியுள்ளார்கள். திறனாய்வுக் கருத்துகளைத் தேடி எடுத்து, பொருத்தமுறச் சேர்த்துத் தம் எழுத்துக்குப் பொலிவு சேர்த்துள்ளார். எளிய, இனிய, ஆற்றொழுக்கு நடை ஆசிரியர்க்குக் கைவந்த கலையாய் இருக்கிறது. காப்பியங்களைப் பற்றிப் பொதுவாகவும், கம்பராமாயணத்தைப் பற்றிச் சிறப்பாகவும் அறிய இந்நூல் பெருந்துணையாய் இருக்கும். இத்தகைய ஆய்வு நூல்கள் பலவற்றைத் தொடர்ந்து திரு. கமலக்கண்ணன் அவர்கள் நமக்குத் தரவேண்டுமெனப் பெரிதும் விழைகிறேன். வளர்க திரு. கமலக்கண்ணனின் இலக்கியப் பணி என வாழ்த்துகின்றேன்.

**ஓங்குக மணிவாசகர் பதிப்பகம்!**

தரமான இலக்கிய நூல்களைப் பதிப்பிப்பதில் மணிவாசகர் பதிப்பகம் முன்னணியில் இருக்கிறது என்பது மிகைச் சொல் லன்று. அன்றைய மணிவாசகரின் வாய்மொழி திருவாசகம். மணியான நூல்களை மணியான முறையில் மணியான மக்கட்குத் தருவதே எம் மணியான தொண்டு என்பதே இன்றைய 'மணிவாசகரின்' திருவாசகமாம். இத்திருத் தொண்டினை இடையறாது இயற்றிவரும் திரு. மெய்யப்பனுக்கு உளமார்ந்த பாராட்டுகள். ஆலெனத் தழைத்து அருகுபோல் வேரூன்றி 'மணிவாசகர்' என்றென்றும் இனிய நூல்களைத் தந்து வருவாராக!

சென்னை-1
2-1-1985

அன்புடன்,
சு. செல்லப்பன்

---

1. பக். 352.

# பதிப்புரை

பேராசிரியர் ச. மெய்யப்பன், எம். ஏ,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

மணிவாசகர் பதிப்பகம் வெள்ளிவிழா நாளை எண்ணி மகிழ்கிறது. வியத்தகு சாதனைகளை எண்ணிப் பெருமை கொள்கிறது. எதிர்காலத் திட்டங்களை வகுத்து இன்பமடைகிறது. துறைதோறும் தமிழுக்குப் புதிய நூல்களைத் தருவதில் பூரிப்படைந்து இன்னும் பல புதிய துறைகளின் நூல்களை வெளியிட உறுதிகொள்கிறது. கால் நூற்றாண்டாகப் பல நல்ல நூல்களைப் பதிப்பித்துப் பரிசுகளையும் பாராட்டுகளையும் குவித்துள்ளது. புதிய ஆசிரியர்களை இனங்கண்டு அறிமுகப் படுத்தி வருகிறது. அரிய பெரிய நூல்களை அழகுடன் வெளியிட்டு மொழிப்பணியை முற்போக்குடன் செய்து வருகிறது.

கம்பரைப் பற்றி நூல் வெளியிடுவதில் எப்பொழுதும் கழிபேருவகை கொள்வது இயல்பு.

முதன் முதலில் பேராசிரியர் கோ. சுப்ரமணிய பிள்ளை அவர்களின் கம்பர் விருந்து, பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கனாரின் ஆய்வுநூல் கம்பர் வெளியிட்டோம். அவை பரிசுகள் பல பெற்றுப் பல்கலைக்கழகங்களில் பாட நூல்களாக அமைந்தன. கம்பன் ஆய்வில் வ. சுப. வின் கம்பர் புதிய நெறி படைத்தது. புதுப்பார்வை நல்கியது.

கவிஞர் அரங்கசீனிவாசன் அவர்களின் கம்பன் திருப்புகழ் வெளியிட்டுக் கம்பன் புகழ்பாடிக் களிக்கிறது.

தமிழ்நாட்டில் கம்பர் இயக்கம் பரவ உழைத்த சான்றோர் பலர்—கம்பனைப் பதிப்பித்தோர், ஆராய்ந்தோர், சொற் பொழிவாற்றியோர், விழாக்கள் கண்டோர் யாவரும் இங்கு நினைவுகூரத் தக்கவர்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் கம்பராமாயணச் செம்பதிப்பு அறிஞர்களின் கூட்டு முயற்சிக்கு ஓர் ஒப்பற்ற எடுத்துக்காட்டு. வை. மு. கோ. வின் பதிப்பு வளமான பதிப்பு—மர்ரே பதிப்பும், சென்னைக் கம்பன் கழக மூலப்பதிப்பும் மக்கள் பதிப்பாய் மலர்ந்துள்ளன. நல்ல பதிப்புகளே கம்பன் புகழுக்கு அடிப்படை. நுண்மான் நுழை புலம் மிக்க வ. வே. சு. ஐயரின் ஆராய்ச்சி கம்பரை உலகப் பெருங்கவிஞராய்க் காட்டிற்று; ஒப்பாய்வில் ஊற்றுக் கண்ணாய் அமைந்தது. அண்மைக் (1984) காலத்தில் பேராசிரியர் மணவாளன் அவர்கள் கம்பனை மில்டனுடன் ஒப்பிட்டு அரிய ஆய்வு நூல் ஒன்றை ஆங்கிலத்தில் படைத்துள்ளார்கள். இவ்வாறாகக் கம்பன் ஆய்வு வளர்கிறது, சிறக்கிறது, தொடர்கிறது.

வளர்ந்து வரும் கம்பன் ஆய்வில் குறிப்பிடத்தக்க சிறந்த முயற்சி கம்பன் ஆய்வடங்கலாகும். அதன் ஆசிரியர் சிவகாமி அவர்கள் அரிதின் முயன்று அரியதொரு ஆய்வு நூலை அளித் துள்ளார்கள். இதுவரை வந்த கம்பனைப் பற்றிய அனைத்துக் கட்டுரைகளையும் ஆய்வுகளையும் பதிப்புகளையும் நூல் களைப் பற்றிய மிகச் சிறந்ததோர் ஆய்வடங்கலாக இது அமை கிறது. இனிவரும் ஆய்வடங்கல்களுக்கு இதுவே வழிகாட்டி.

கம்பனைக் கற்கும் நெறியில் வழிகாட்டியாய் அமைந்தோர் பலர். வே. ப. சுப்ரமணிய முதலியார், ரசிகமணி டி. கே. சி, பி. ஸ்ரீ., சேதுப்பிள்ளை. தெ. பொ. மீ., வையாபுரிப்பிள்ளை கம்பன்புகழ் பரப்பிய அறிஞர்கள், அவர்தம் நூல்கள் - கம்ப தத்துவம்-கம்பசித்திரம் பரவப் பயன்படுபவை.

பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்களும் ராம கிருஷ்ணன் அவர்களும் கம்பன் ஆய்வில் தனித்திறம் சான்ற வர்கள்; பாத்திர ஆய்வுகளில் அரிய நூல் பல படைத்துள்ளனர்.

அண்மைக்காலத்தில் மணிவாசகர் பதிப்பகம் உலக விஞ்ஞானிகள், உலகம் போற்றும் இந்திரா, உலகமொழிகள், உலகப் பெருங்கவிஞர்கள் என உலகளாவிய எண்ணங்களைத் தமிழ்மூலம் தமிழகத்திற்கு அளித்து வருகிறது. இப்போது

மிகுந்த பெருமிதத்துடன் 'உலகப்பெருங் கவிஞர் கம்பர்' நூலை வெளியிடுகிறது. இந்த ஆண்டு உலக இளைஞர் ஆண்டு. உலகப் பெருங்கவிஞர் கம்பர் என்னும் நூலை இந்த ஆண்டில் வெளி யிடுவதில் இப்பதிப்பகம் மட்டற்ற மகிழ்ச்சி கொள்கிறது.

கடந்த கால் நூற்றாண்டாகத் தமிழ்த் திறனாய்வு வளர் கிறது. ஒவ்வோர் இலக்கியமும் சிலப்பதிகாரம், திருக்குறள், கம்பராமாயணம் அறிவியல் அணுகு முறையில் ஆராயப் பெறுகின்றன. மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசி மகிழாமல் திறமான புலமை எனில் ஊரறிய உலகறியச் செய்யும் முயற்சிகள் இன்று நடைபெறுகின்றன. இவ்வகை முயற்சிகளால் இந்நூலுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு.

பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் எம். ஏ. மாணவர் களுக்குக் கம்பராமாயணம் முழுவதையும் பாடமாக வைத்துள் ளார்கள். டாக்டர் வ. சுப. அவர்கள் கம்பனின் முழுப்பார்வை யின் அவசியத்தை ஆய்வுகளால் நிறுவினார்கள். இருவர் தம் நன் முயற்சிகளும் தமிழில் பல்வகை ஆய்வுகளுக்கு வித்திட்டன. இவ்வகையில் இந்நூல் கம்பனைக் கற்பதற்கு வழிகாட்டி யாகவும் முழுப்பார்வை பார்ப்பதற்கு உறுதுணையாகவும் அமைகிறது.

இந்நூலாசிரியர் பேராசிரியர் கமலக்கண்ணன் அவர்கள் கம்பனைப் பற்றி வெளிவந்த அனைத்து நூல்களையும் கற்றுத் தேர்ந்து இந்நூலை உருவாக்கியுள்ளார். ஆசிரியர் பன்னூற் பயிற்சி மிக்கவர் என்பதையும் தமிழ்க்காப்பியங்களில் தனிப் பயிற்சி பெற்றவர் என்பதையும் ஒப்பாய்வில் திறம் சான்றவர் என்பதையும் இந்நூலைக் கற்போர் உணர்வர்.

இந்நூலாசிரியர் சிந்தனைத் தெளிவும் எழுத்தாற்றலும் மிக்கவர். பாடஞ் சொல்வதில் வல்லவர். ஒரு நல்லாசிரியர் நலமுடன் பாடம் நடத்தும் பாங்கு இந்நூலில் பளிச்சிடுகிறது. இஃது இவ்வாசிரியரின் முதல்நூல். இவ்வரிய பெரிய நூல் எழுதிய ஆசிரியர் கமலக்கண்ணன் அவர்களை அறிமுகப் படுத்துவதில் பெருமை அடைகிறேன். இதற்கு முன் அறிமுகப் படுத்தப்பட்ட ஆசிரியர்கள் பலர் பெருமை பெற்றதுபோல் இவரும் பேரும் புகழும் பெறுவார் என்பது என் உறுதியான நம்பிக்கை.

இந்நூலுக்குச் சிறந்த ஆய்வுரைகளாக அணிந்துரை வழங்கிய பெருமக்கள் பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்

களும் தமிழ்வளர்ச்சி இயக்குநர் சிலம்பொலி செல்லப்பனார் அவர்களும் இந்நூலின் பல்வகை சிறப்புகளையும், ஆசிரியரின் புலமை நலத்தினையும், ஆய்வு நெறியையும், எழுத்து வன்மையினையும், கல்வித் தேர்ச்சியினையும், நூலை நடத்திச் செல்லும் பாங்கினையும் பல்லாற்றானும் பாராட்டியுள்ளனர். பேரறிஞர்களின் சான்றிதழ்களுக்குப்பின் மேலும் உரைப்பதற்கு யாது உளது?

கலைக்களஞ்சியத்தின் பிரதம பதிப்பாசிரியரும், பல்துறை அறிஞரும், பன்னூல் ஆசிரியருமாகிய அறிஞர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் அணிந்துரை இந்நூலுக்கொரு வழிகாட்டி.

நாளும் நல்ல தமிழ் வளர்க்கும் சிலம்பொலி செல்லப்பனார் தமிழக அரசுக்குக் கிடைத்த செல்வமாகும். அரசின் கொள்கைகளை நடைமுறைப்படுத்தும் நல்ல தமிழறிஞர்—இன்றைய திரு. வி. க. வாக இருந்து பலநூறு எழுத்தாளர்களுக்கு வழிகாட்டியாக ஆக்கமும், ஊக்கமும் அளிப்பவர்கள்—நூல் முழுவதையும் படித்து அரிய ஆய்வுரை வழங்குவதில் அவருக்கு நிகர் அவரே.

ஊக்கமும், உழைப்பும் மிக்க ஆசிரியர் கமலக்கண்ணன் அவர்கள் இதுபோன்ற ஆய்வு நூல்கள் மேலும் பல அளிக்க வாழ்த்துகிறேன். கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கக் கவிஞர்களையும், கற்றோர்களையும், அறிஞர்களையும், ஆர்வலர்களையும் அன்போடு அழைக்கிறேன்.

